7th March 1958]

சார்ஜும் அவர்களிடமிருந்து வாங்கிக் கொண்டிருக்கும்போது தங்குவதற்குக்கூட அவர்களுக்கு ஷெட்டு இல்லாமல் மரத்தடியில் தங்கவேண்டியிருக்கிறது. அவர்களுக்கு தங்க ஷெட் வசதி, கக்கூஸ் வசதி முதலியன செய்து கொடுக்கவேண்டும் என்பதாகக் கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஷெட்டில் இருப்பதைவிட மரத்தடியில் இருப்பது இன்னும் குளுமையாகக் கூட இருக்கும். மேலும் கட்சிக்காரர்களுக்கு வெளியில் போய்வர சந்தர்ப்பம் உண்டு. இருந்தாலும் எங்கெங்கே அவர்களுக்கு வசதி தேவைப்படுகிறதோ அவ்வளவையும் செய்ய ஏற்பாடு செய்யலாம்.

### *Single Teachers' Association*

* 229 *Q.*—SRI M. P. SUBRAMANIAM : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Government have received any deputation on behalf of the Single Teachers' Association in October 1957; and

(*b*) if so, the nature of representations made and the action taken thereon?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Yes. Two representations have been received.

(*b*) The representations were to the effect—

(i) that the training period should be reduced to one year;

(ii) that the duration of training should be treated as duty and salaries for the period of training should be paid;

(iii) that they should be posted to their original posts after training;

(iv) that their services before training should be counted for seniority; and

(v) that they should be considered for appointment on the social education side in National Extension Service and Block Development areas for their better living under the same National Planning Scheme, if necessary.

The requests were examined and it was found not possible to comply with the requests.

SRI M. P. SUBRAMANIAM : ஓராசிரியர்கள் சங்கத்தின் சார்பாக நிதி அமைச்சர் அவர்களை நேரில் சந்தித்து ஐந்து கோரிக்கைகளை தெரிவித்துக் கொண்டதாகவும், அதில் இரண்டு கோரிக்கைகளை நிதி அமைச்சர் அவர்கள் ஒப்புக்கொண்டு நிறைவேற்றி தருவதாகவும் சொல்லப்படுகிறது. குறிப்பாக இந்த இரண்டாவது பயிற்சிக் காலத்தில் அவர்களுக்கு முன்பு கொடுக்கப்பட்ட அடிப்படைச் சம்பளத்தையே கொடுப்பது என்பதாகவும், பயிற்சி பெற வருவதற்கு முன் செய்த சேவையை சர்வீசில் சேர்த்துக் கொள்ள ஒத்துக்கொண்டதாகவும், அப்போது இந்தச் சபையின் ஒரு உறுப்பினர் கூட அருகில் இருந்ததாகவும் கூறப்படுவது உண்மைதானா? உண்மை என்றால் அந்த வாக்குறுதி நிறைவேற்றப்பட்டதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அந்தமாதிரி வாக்குறுதி கொடுத்ததாக ஞாபகம் இல்லை. அந்தமாதிரியாகக் கொடுத்திருக்கவும் முடியாது.

[7th March 1958

SRI K. RAMACHANDRAN : ஓராசிரியராக வேலை பார்த்து இப்போது பயிற்சிக்கு அனுப்பப்பட்டிருப்பவர்கள் எல்லோருக்கும் நிரந்தரமாக வேலை கொடுப்பதற்காவது வாய்ப்பு இருக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இருக்கும் என்று நம்புகிறேன்.

SRI N. K. PALANISAMI : ஏற்கெனவே அவர்கள் சிறிது காலம் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். மூன்றாண்டு ஆசிரியராகவும் பணியாற்றியிருக்கிறார்கள். திரும்ப அவர்களை இரண்டாண்டு பயிற்சிக்கு அனுப்புவதால், பயிற்சி முடிந்த பிறகு, பழையபடி அவர்களுக்கு வேலை கொடுப்பதில் கஷ்டம் ஏதாவது உண்டா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : வேலை கொடுப்பதில் கஷ்டம் இருக்காது. வேலை கொடுக்கப்படும். அதற்காகத்தான் பயிற்சியே இப்போது கொடுக்கப்படுகிறது. பயிற்சி இல்லாமல் தொடர்ந்து ஆசிரியராகப் பணியாற்ற முடியாது என்ற காரணத்தினால் பயிற்சி அளிக்கப்படுகிறது. திரும்ப வேலையும் கொடுக்கப்படும்.

SRI V. SANKARAN : ஓராசிரியர்களாக வேலை பார்த்தவர்களை பயிற்சிக்கு அனுப்பும்போது பயிற்சி பெற்று வந்தவுடன் திரும்ப அவர்களை எந்த இடத்தில் முன்பு வேலை செய்தார்களோ அவ்விடத்திலேயே போடுவதற்கு அதாவது lien பாதுகாப்பு கொடுப்பதாக சர்க்கார் ஒத்துக் கொண்டதாக எனக்கு ஞாபகம். அந்தமாதிரியே இப்போது செய்வார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அவர்களுக்கு முன்பு சொன்னமாதிரி கூடுமானவரையில் எல்லோரையும் முன்பு அவரவர்கள் வேலை பார்த்த இடத்திலேயே போடுவதற்கு முயற்சி செய்யலாம். எல்லோருக்கும் அவரவர்கள் வேலை பார்த்த இடத்திலேயே உத்தியோகம் கிடைக்கும் என்று சொல்ல முடியாது.

SRI K. ANBAZHAGAN : ஓராசியர்களாக நியமிக்கப்பட்டவர்கள் முன்பே 2 மாத காலம் பயிற்சி பெற்றவர்கள், பின்னர் மூன்றாண்டு ஆசிரியராகப் பணியாற்றியவர்கள் என்பதை எல்லாம் கவனத்தில் கொண்டு இப்போது அவர்களுக்கு அளிக்கப்படும் பயிற்சியை இன்டென்ஸிவ் பயிற்சியாக அதிக முக்கியத்துவம் கொடுக்கும் பயிற்சியை ஓராண்டு காலம் மாத்திரம் அளிக்க சர்க்கார் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த விஷயம் முன்பே பரிசீலனை செய்து பார்க்கப்பட்டது. இந்தத் துறையில் அதிக நிபுணத்துவம் வாய்ந்தவர்கள் ஒரு வருஷ காலத்திற்குள் பயிற்சியை இவர்களுக்கு கொடுக்க முடியாது என்றார்கள். ஆகவே இரண்டு வருஷம் இவர்களுக்கும் பயிற்சி பெறவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது.

SRI M. KALYANASUNDARAM : ஓராசிரியர்கள் சங்கத்தாருடைய கோரிக்கையை நிறைவேற்ற நிதி நிலைமை இடம் கொடுக்கவில்லையா ? அல்லது அந்தத் கோரிக்கைகள் நியாயமற்றவையா என்று அறிய விரும்புகிறேன். இதற்காக எவ்வளவு செலவாகும் என்று தீர்மானித்தார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இதில் நாம் கவனிக்கவேண்டிய விஷயம் மற்றவர்களைப் போல இவர்களும் திறமையுடன் ஆசிரியராகப் பணியாற்றவேண்டுமென்றால் இரண்டாண்டு பயிற்சி பெறவேண்டும் என்பதுதான். இவர்களுக்கு அதிகச் செலவாகிறது என்றால் மற்றவர்களுக்கும் அதிகச் செலவுதான் ஆகிறது. இவர்களைவிட கஷ்டம் உள்ளவர்களும் இருக்கலாம். எல்லோருக்கும் ஒரே விதமான பயிற்சியை அளித்தால்தான் இவர்களாலும் மற்றவர்களைப் போலவே பணியாற்ற முடியும் என்றுதான் இப்படிச் செய்யப்பட்டது.

SRI T. T. DANIEL : May I know what the salary and allowances of these teachers are and whether the Government are giving any stipends to these teachers who undergo the training?

7th March 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir, they are being given the stipend as the other trainees.

SRI A. GOVINDASAMY : இந்த ஓராசிரியர் எற்கனவே வேலை பார்த்த நேரத்தை சர்வீஸோடு சேர்த்துக் கொள்ள அரசாங்கம் முன் வருமா ? 1-10 p.m.

THE HON. SRI C. SUBRAMANIAM : இவர்களுடைய சர்வீஸ் பிர காரம் பென்ஷன் போன்றவை பிற்பாடு கொடுப்பதில் ஆட்சேபனையில்லை. ஆனால் மற்றவர்களுக்கு மேல் ஸீனியாரிட்டி கொடுப்பதில் ஆட்சேபம் இருக்கிறது. இவர்களை டெம்பரரியாக சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கிறது.

*Single teacher elementary schools*

* 230 *Q.*—SRI M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the number of single teacher elementary schools that were opened in 1955-56 and 1956-57; and

(*b*) the number of such schools under (i) district boards, and (ii) panchayat management?

THE HON. SRI C. SUBRAMANIAM :

(a) 1955-56 ... 1,495
1956-57 ... 850

and

(*b*) three were opened by panchayats and the rest by district boards.

SRI M. JAGANNATHAN : 1955-56-ம் வருஷத்தில் திறக்கப்பட்ட ஓராசிரியர் பள்ளிகளைவிட 1956-57-ல் திறக்கப்பட்ட பள்ளிக்கூடங்கள் மிகக் குறைவாயிருக்கின்றன. இதற்கு காரணமென்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : அப்படி ஒன்றுமே திறக்கப் படவில்லை. எந்தெந்த இடங்களில் அவசியமோ அந்தந்த இடங்களில் திறக்கப்பட்டிருக்கிறது. இது, ப்ளானிங் கமிஷனால் தனியாக திட்டம் வகுக் கப்பட்டது என்பது அங்கத்தினர்களுக்குத் தெரியும். அந்தத் திட்டப்படி, இரண்டு வருஷங்கள் மட்டுந்தான் கொடுத்திருந்தார்கள்.

SRI M. JAGANNATHAN : எத்தனையோ கிராமங்களில் ஆரம்பக் கல் விக்குக்கூட பள்ளிக்கூட வசதியில்லாமல் மாணவர்கள் கஷ்டப்படுகிறார்கள். ஆகவே சர்க்கார் இந்தத் திட்டக் கமிஷன் பள்ளிகளை மேலும் மேலும் திறக்க என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுது புதிய பள்ளிக் கூடங்கள் ஆரம்பிக்க வேண்டிய அவசியமில்லை என்பது என் அபிப் பிராயம். இப்பொழுதுள்ள பள்ளிக்கூடங்களில் அதிகம் பிள்ளைகள் வரும் போது அதை விஸ்தரிக்கவேண்டும். கனம் அங்கத்தினர்கள் இதுபற்றி நமது சட்ட சபை கமிட்டி செய்திருக்கக் கூடிய சிபார்சுகளை கவனித்திருக் பார்கள் என்று நம்புகிறேன். ஆரம்பப் பள்ளி ஒரு மைலிற்குள்ளாக எல்லோருக்கும் இருக்க வேண்டும். குறைந்தது 500 ஜனத்தொகை இருக்கக் கூடிய இடங்களில் தான் இது மாதிரி பள்ளிகள் ஏற்படுத்த சௌகரியமாக இருக்கும். இல்லாவிடில் 20, 30 பிள்ளைகளை வைத்துக்கொண்டு அவைகளைத் தொடர்ந்து நடத்தவேண்டியிருக்கும். ஓராசிரியர் பள்ளிகளை தொடர்ந்து நடத்துவது சரிய.ல்ல ஆகவே, மூன்று நான்கு கிராமங்களுக்கு மத்தியில் ஒரு பள்ளிக்கூடம் அமைத்து, கூடுதல் பிள்ளைகள் வந்து சேரும்போது கூடுதலாக இரண்டு மூன்று ஆசிரியர்களை நியமிப்பதுதான் நல்லது. புதிதாக பள்ளிக் கூடம் ஆரம்பிப்பது என்பது ஆலோசித்துத்தான் செய்யவேண்டும்.